உ

*ஸ்ரீ கொடுமளூர்

# உடையாடிக்குமரன் திருப்புகழ்

இஃது

ஸ்ரீ திருக்கானப்பேருர் என்னும் காளையார்கோவில்
வேதாந்த மடாலயத்தின் ஆதிகுருவாகிய

## ஸ்ரீலஸ்ரீ செல்லப்ப ஞானதேசிக சுவாமி

அவர்களது பாதசேகரராகிய

ஸ்ரீ இளையான்குடி வேதாந்த மடம்

## ஸ்ரீ சிவானந்தசுவாமியவர்களால்

பாடப்பெற்றது

---

*இது இராமநாதபுரம் ஜில்லாவில் பரமக்குடி ரயில்வே ஸ்டேஷனில் இருந்து கமுதிபோகிற கார்மார்க்கத்தில் கொடுமளூர் ரோடில் இரங்கினால் ஒருமைல் சமீபத்திலிருக்கும். குமரனைத் தரிசிக்கலாம்.





ஸ்ரீ சிவானந்த சுவாமிகள்
வேதாந்த மடம், இளையான்குடி.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்



# ஸ்ரீ கொடுமளூர்த் திருப்புகழ்

## காப்பு

தந்ததனத் தானதன தனதான
தந்ததனத் தானதன தனதான

செந்திருக்கொள் தாருவினேர் உடைநீழல்
தென்கொடும ளூர்முருகன் கழல்பாட

அந்தரிக்குக் காவல்புரி கணநாதா
அன்பனுக்குன் னுதவு தருவாயே

ஐந்துகரப் பேழைவயி றுடையோனே
அந்திநிற மேனியுடை யழகோனே

கந்தனுக்கு மூத்ததிரு முதல்வோனே
கம்பகும்ப மாமுகத்துப் பெருமாளே



தனத்த னத்தன தனத்தன தனதன தனதான
தனத்த னத்தன தனத்தன தனதன தனதான

திருக்கி னின்றவர் திருக்கறு முனிவரர் செகசாலம்
திரித்த வித்தவர் செபித்தருள் பெறுபவர் செவிதான

உருக்கொள் கின்றவர் உறுத்தகி லந்தனை யுறவாடும்
உலுத்தர் தங்களை யொடுக்கின தவசிக ளுளமூடே

நிருத்த மன்றென நினைத்தினி துறைதரு நிமலோனே
நிறத்து மஞ்ஞையி ஞாத்தினி தமருனை நினைவேனோ

குராக்கி னங்கொடு அரக்கனை வென்றவன் மருகோனே
கொடும ளம்பதி யுடைக்கணி லமர்ந்திடு பெருமாளே

---

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதான

படியினின் மிடியுறு பாதனர் பலர்சிறை
பரபத மிதுவென மகிழ்வாக

பதமதை நினைபவர் உனதிரு வடிமலர்
பலகொடு பரவிட இடர்தீர
வடிவுடை மகளிரும் திடமுள விளைஞரும்
வரமுற நிறைநிறை வருவோர்கள்
வளமலி யுடைநிழல் தனிலுறை குமரனை
மனமொழி யுடல்சுசி யுடனேதான்
அடிமுடி நடுவற இருவினை மலமற
அகமுக மகிழ்வுற நினைவோர்கள்
அனவர தமுமுயர் பதமதை யடைவுற
அருள்பெரு கடலென அருள்வோனே
குடிலென அடியவர் உளமதி லுன்றைதரு
குகசர வணபவ கதிதாராய்
கொடுமள நகர்தனில் அழகொடு முறைதரு
குறுமுனி குருபர பெருமாளே 3

---

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதான

திருமுக மழகிய குருபர அறுமுக
சிவநுதல் வருசுத குகதேவர்

சிறைதவிர் நிருமல பரிபுரை பயிரவி
சிவைபரை யருண்மக பலயோகர்

அருமன முறைபவ அவனிவ னதுவென
அறிவில ரகமுறு சுயரூப.

அவமுறு மடியனை மிடியனை யசடனை
அறுதின முனிவினை யடியாரில்

ஒருதவ னிவனென உரைதா வருளிய
உனதுய ரருளினை யுனிநாளும்

உடைநிழ லமர்தரு குமரவு னடிமணி
யொருகொடு மளநகர் தனிலேகி

இருகணீர் சொரிதர எனதுயிர் உடல்நெக
இருண்மல வினையற எழிலாக

இமையுறு வமையமும் எனதற வழிபட
இனிதுற அருள்புரி பெருமானே 4

---

தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன தனதான

அருக்க னங்கியின் னவிர்மதி நிலவிய
நிருச்ச கந்தனி லெதிரறு பரசிவ
அனற்கண் டங்கிய அறுபொறி சரவண பவனுகி

அனத்தை வென்றிடு நடையறு வரினது
தனத்தை யன்றயில் குகசிவ அறுமுக
அறத்தை நன்குற நிறுவிய பரசிவ புதல்வோனே

திருக்க ணம்பிகை சிவைபரை நிருமலை
பரக்கு ளன்புறு பகவதி பயிரவி
சிவத்தி லங்கிய திரிபுரை யருள்திரு வடிவேலா

சினத்து டன்பல முனிவரை யமரரை
வருத்தி யின்புறு மலைவடி வசுரனைச்
செயித்து அன்பர்கள் துயரற வருளிய அதிதீரா

செருக்கு மிஞ்சிய அசுரர்கள் சிரமுரம்
அறுத்தெ றிந்தவர் அடியொடு குடிகெட
திரித்து அம்பரர் சிறைதவிர் அமரர்கள் மூதல்வோனே

சிவக்கொ ழுந்தன திகழொளி பவசுக
தலத்தி லன்பர்கள் மனமதி லுறைபவ
திருத்த மின்றிய வடியனை யுனதிரு சரண்சேராய்

திருக்க ரும்பொழில் கனிகுளிர் தருவன
கருக்கொள் சங்கினம் கழனிகள் தருவன
தெருக்க ளெங்கணு மணந்தரு கொடுமளம் பதியூரா

செழித்த கொம்புகள் பலநிறை யுடைநிழல்
வசித்து அன்பர்கள் வழிபட வரமருள்
செகத்தி லங்கிய குமரசற் குருபர பெருமாளே 5

தான தனதன தான தனதன
தான தனதன தனதான

ஆதி யருமறை யோது பிரமனும்
நார மிசைதுயில் திருமாலோன்
ஆய யிவர்களும் தேவர் முனிவரும்
யாரு மறிவரி தெனவோதா
வேத முதல்வனும் நாத முடிவனும்
மேல ரகமதி லுறைவோனே
வீர பரமிகு சூர ருடலதை
வேறு படவிடு வடிவேலோன்
இதெ னகமதில் சேருமலமதைத்
தீர விடுமதி தருவோனே
தேக திரிவித சிவ திரிவித
சேர விடநினை அடியேனால்
பாத கமலதை சேர நினைதர
பாக முறவருள் பெறவோதாய்
பாவ மறநினை வோர்கள் பரவிடு
பார கொடுமளூர் பெருமாளே 6

தனதன தாத்தத் தனதான
தனதன தாத்தத் தனதான

கடுமன வாற்றிற் சுழலாதே
கதுமெனத் தூற்றித் திரியாதே
வடுவெனு மார்க்கத் துழலாதே
வடிவினர் மாற்றம் விழையாதே
திடுமென வாழ்த்தக் கழல்தாராய்
சிவபதம் போற்ற மதிதாராய்
கொடியுடை வீட்டி லுறைவோனே
கொடுமளூர் வேட்டைப்பெருமாளே 7

---

தான தன தான தானதன தன
தான தன தான தனதான

வேதமுத லான ஆகமமும் யோக
வேதனம தாக அறைநூலும்
வேறுமுள தான பேதபர மாக
வேதையற வோது பலநூலும்
போதுமதி சூடும் நாதரது தாளில்
பூரணம தான மதியோகம்

போதகமது வாக தாரணைச மாதி
பூணுகென சால அருள்வோனும்
மாதவனை யாதி தேவனை வோருள்
மாதுயரை யீயும் அசுரோனை
மாயமயல் தீர விரதிர மாள
வாகைபெற வேலை விடுவோனும்
கோதைகுற மாதை வாதுபல கூறி
கூடினை வாகி வருவோனும்
கோடிதவர் தேட வேடவடி வாகிக்
கோடுவுடை மேவு பெருமாளே 8

---

தனன தனன தத்த தனனதனன தத்த
தனன தனன தத்த தனதான
தனயர் மனையர் சுத்த அனையர் உறவர் மெத்த
தமார் வினையர் பத்தர் எனவோரு
சருவி வெருவி சித்த சலன மலின முற்றுச்
சகடு பகடு வொத்து — அலையாதே
உனது இருப தத்தை எனது மனதில் வைத்து
உருகி யழுது நித்தம் — நினைவேனோ
உலக மயல றுத்துக் கலக வினையொ ழித்து
உனது சொருப நித்த — முறுவேனோ
கனவை நிகர நித்த வனித சுகம தத்தின்
கவலை பெருகி நித்த — மழுகாதே

கபட மயல கற்றக் கருதி யுனது சுத்த
கருணை யடிய னுக்கு — அருள்வாயே
மனது கருவ மிக்கு தனது பெருமை மிக்கு
மகிழ சுரர்க சிக்க — விடும்வேலா
மகிமை கொடும எத்தில் அமரர் தொழவே நித்தம்
வடிவ வுடையபி னிற்கும் — பெருமாளே 9

---

தனதன தான தனதன
தனதன தான தனதன
தனதன தான தனதன தனதான

நரசுர தேவா நமோ நம
அரியய நாதா நமோநம
நவநிதி தாதா நமோநம அடியாருள்
நவநவ கோலா நமோநம:
குறமகள் லீலா நமோநம
நவமணி பூண நமோநம மதிசூடும்
திருசிவ பாலா நமோநம
சரவண சாதா நமோநம
சிவகிரி வாசா நமோநம சிவயோகர்
செபமகிழ் நேசா நமோநம
பவமற ஆள்வாய் நமோநம
தெவகஜ மோகா நமோநம கதிமேவத்

திருவருள் கூராய் நமோநம
சிவவுணர் தாராய் நமோநம
சிதமயல் தீராய் நமோநம தெளிவான
சிவபதம் நேராய் நமோநம
திருவடி தாராய் நமோநம
சிவகுரு நாதா நமோநம சிவஞானர்
குருபர நாதா நமோநம
பரிபுர பாதா நமோநம
குமரிதன் பாலா நமோநம உடைநீழல்
கொடுமனூர் வாசா நமோநம
குரமுரு கேசா நமோநம
குமரைய தேவா மனோகர பெருமாளே 10

---

தத்தனத் தானதன தனதான
தத்தனத் தானதன தனதான
முப்பழப் பூஜையுகந் தருள்வோனே
முக்கணர் தேவர்புகழ் முதல்வோனே
கப்புடை யோருடையி லமர்வோனே
கற்றுடை யோர்மகிழுங் குமரேசா
எப்பவு மேகொடும னுறைவோனே
எச்சம யோர்புகழு மழகோனே
அற்புதப் பாதமெனக் கருள்வாயே
அற்புத வேடரூபப் பெருமாளே 11

தத்த தத்த தத்தனன தந்த தானு
தத்த தத்த தத்தனன தந்த தானு

எத்த லத்து வுத்தமரும் வந்து நாளும்
எப்ப டிக்கும் பத்திசெய்து வந்து தாழும்

நித்த நித்தம் புத்திமதி தந்து சீராய்
நிச்ச யிந்த வத்தையதி கந்து கூருய்

நித்த புத்த சுந்தவுணர் வந்து தாராய்
நிச்ச லத்து வைத்தருளு கந்து கூராய்

உத்த ரத்து கத்துடையில் வந்து தாளே
உச்சி யத்தில் வைத்தருளு கந்த வேளே 12

---

தனன தானன தனனு தனனு
தனன தானன தனனு தனனு
தனன தானன தனனு தனனு தனதானு

வடுவ தாம்நெறி புரிமா னுடரால்
கெடுவ தாம்வழி எனையே தொடரா
வழிய தேபல கலையா லுடனே பெறவேதாய்

வழுவ தாங்கலை யுணரா ருடனே
பொழுது போகிட எனைநீ யுடனே
வழுவி டாதுறு முறையே திடமா யருள்வாயே

கொடுமை யேபுரி பணியா ருடனே
கடுமை யேபுரி கணமா துடனே
குறள தேபுரி குணியா ருடனே யறவேதாய்

குணம தேயயில் பெரியோ ருடனே
அணவி யேபல கலைதேர்ந் துடனே
குறைவி லாதுயர் பதமார்ந் திடவே வருவாயே

கடுவ தேதன துடலாய் வடிவாய்
கொடுமை யேபல தொழிலா யுடையார்
கருமை யேதன துருவாம் நெடியார் அறவேதான்

கதிர வேல்விடு கருவே திருவே
முதிர வானவர் சிறைதீ ருருவே
கதிய தேபெறு அடியார் குருவே வருவாயே

கொடிகள் சூழ்பல மதில்கோ புரமார்
நெடிய மாளிகை யமரா பதிநேர்
குடிகு பேரனி விகரார் பலர்வாழ் திருவூராம்

கொடும ளூர்வரு குமரா வமரா
உடையி னீமுவி லுறைவா யிறைவா
குமரி நீலிதன் புதல்வா முதல்வா பெருமாளே 13

---

தனதன தான தனதான
தனதன தான தனதான

படியறு ஞான முறவோதாய்
பாபதஞ் சேரு முணர்தாராய்
படியினர் கூறும் புகழ்சேராய்
பதமலர் சூடும் செயல்கூறாய்

கடிகமழ் பாதம் பெறநேராய்
கருணையென் மீது நரவாராய்
கொடியுடை மேவு முருகோனே
கொடும்ளூர் வாழும் பெருமாளே 14

---

தத்தனன தத்தனன தத்தனன தானதன
தத்தனன தானதனத் தனதான

தத்துவம சிப்பொருளை யத்துவித மாகவுரை
சற்குருவ தானபரப் பெருமாள்காண்
சற்சனரி டத்துறையும் பத்தியதி னுளுமுறை
தற்பரம ஞானகனப் பெருமாள்காண்
புத்தமுதி னைப்பருகச் சித்தமுட னேயருளும்
பொற்புடைய தானசுகப் பெருமாள்காண்
புத்தியதி லைத்துருக நித்தமன மோடுநினை
பொற்பதம தாரவருள் பெருமாள்காண்
கத்துருவ கற்றியருள் முத்தருள மீதுவுறை
கற்பகம தானகுகப் பெருமாள்காண்
சற்றவரு ளத்திருந்து சற்றுமக லாதுறையக்
கற்றருளு மாறுமுகப் பெருமாள்காண்
கொத்துடையி னத்திவளர் பத்தர்மன வாசியதில்
கொட்டமுட னேதிரியும் பெருமாள்காண்
கொற்றவர்க ளுற்றமளு வுற்றகொடு ளூருடையில்
குற்றமற வாழ்குமரப் பெருமாளே 15

தன தன தனதன தனதான
தன தன தனதன தனதான

நடமிடு சிவனுடை புதல்வோனே
நவிதரு புதல்விதன் மணவாளா

படமிடு மாவணை துயில்மாயோன்
பகர்தரு மொருதிரு மருகோனே

கடனென வுனதடி பணிவேனைக்
கதியது பெறவருள் புரிவாயே

கொடுமளம் பதியுடை யமர்வோனே
குமரைய குருபர பெருமாளே 16

திருச்சிற்றம்பலம்.



ஸ்ரீ ராஜேஸ்வரி பிரஸ், சிவகங்கை-59.